

# ந்தர விநாயகர் பதிகம்.



சண்முக முதலியார்.




உ
கணபதி துணை

திருக்கோவலூர் தாலுகா
ஒட்டம்பட்டு

# ஸ்ரீசுந்தர விநாயகர் பதிகம்.

---

கண்டாச்சிபுரம் நாட்டாண்மை
**ஸ்ரீ சண்முக முதலியார் அவர்களால்**
இயற்றப்பெற்ற
இது
திருக்கோவலூர் போர்டு ஹைஸ்கூல்
தலைமைத்தமிழ்ப்பண்டிதர்
**ஸ்ரீ தி. வடிவேலு முதலியாரவர்களால்**
பார்வை யிடப்பெற்று

---

ஒட்டம்பட்டு
ஸ்ரீசுந்தர விநாயகராலய தர்மகர்த்தா
**ஸ்ரீமான் சிங்காரவேல் முதலியாரவர்களால்**
திருக்கோவலூர்
ஸ்ரீநாராயண விலாசம் பிரசில் பதிப்பிக்கப் பெற்றது.
1928.

உ

சிவமயம்

# சாற்றுக் கவி

---

திருக்கோவலூர் போர்டு ஹைஸ்கூல்
தலைமைத் தமிழ்ப் பண்டிதர்
**ஸ்ரீமான் தி. வடிவேலு முதலியாரவர்களால்**
இயற்றப்பெற்றது.

---



திங்கள் பொழியு மொட்டம்பட் டென்னும் பதியிற்
றிகழ்ந்தி லங்கித்
தங்குஞ் சுந்தர விநாயகரின் றாளைத் துதித்தே
கதிய டைவான்
செங்குந் தத்தின் குலம்விளங்கச் செனித்தோன்
தக்க கழுவர் பணிவிலென
பொங்கு சண்முகப் பெயர்கொள் புலவோ
னியற்றி யளித்தனனே.

---

# நூல்.

## திருத்தாண்டகம்,

---

ஐங்கரத்தா னறுமுகத்தான் முன்னோ னீசன்
அருளுடையாள் கைநீட்டி யன்பாற் கூவி
சங்கெடுத்துத் தனதுமுலைப் பாலைக் கொண்டு
சர்க்கரையு ஞானமுதுஞ் சமனாக் கூட்டி
செங்கனிவா யுறவருத்தி தொட்டி லிட்டு
தீங்கரும்பே செந்திருவே யெனச்சீ ராட்டி
பொங்குறுந்தாய் மனதுவந்தா னொட்டம் பட்டில்
பொருந்துபவ னெனையாளும் பொருப்பு ளானே. 1

மூன்றான கண்ணுடையான் சுந்த ரர்க்கு
முகத்திலங்குங் கண்கெடுத்து முன்னாற் கண்டு
ஊன்றிச்செலக் கோலொன்றை யுதவிக் காத்தோ
னுவப்புறுமுற் சேயாக வுதித்தான் ஞானச்
சான்றோர்கள் நிதம்பாடித் தாளைப்போற்றுந்
தகைமையுளான் றமக்குமிக ரொருவ ரேனும்
போன்றாத படியுயர்ந்தா னொட்டப்பட்டில்
பொருந்துபவ னெனையாளும் பொருப்பு ளானே 2

வண்ணமுறு மூடிகத்தா னெருகொம் புள்ளான்
மாணிக்க வாசகர்க்காம் வைகை யாற்றின்
மண்ணெடுத்துப் பிட்டருந்தி செழியன் கையால்
மாறுத வடுவுடைய அடியும் பட்டோன்
பண்ணுறுநற் குலம்விளங்கும் பால னாகி
பருத்தவயி றுடனுதித்தான் பணிந்தோர் நெஞ்சின்
புண்ணகற்றி யருள்புரிந்தா னெட்டம் பட்டில்
பொருந்துமவ னெனையாளும் பொறுப்பு ளானே. 3

அருளுடையான் செம்பவளக் குன்றை யொப்பான்
அனுதினமும் வாயாரப் பாடுந் தொண்டர்
தெருளுடையான் முப்புரிநூல் திகழு மார்பான்
திரிமலமாம் பெருவலையிற் சிக்குப் பட்ட
மருளுடைய நாயேனை வலிந்தாட் கொண்டான்
மாசறியான் றேசுடையான் மதித்தற் கெட்டாப்
பொருளுடையார் திருமகள்சே ரொட்டம் பட்டில்
பொருந்துமவ னெனையாளும் பொறுப்பு ளானே. 4

செப்பரிய பெரும்புகழான் திருவா ரூரில்
செனித்துநாக் கரையனெனத் திருப்பேர் வாய்த்த
அப்பருக்குக் கட்டமுத மெடுத்துச் சென்று
அழற்கானி லளிக்கவவன் அன்பா லோதுந்
தப்பறியாப் பனுவலுக்கு வுவந்தான் றந்த
தந்திமுகன் சப்பாணி தன்னே ரில்லாப்
பொற்புடையான் பல்வளஞ்சூ ழொட்டம் பட்டில்
பொருந்துமவ னெனையாளும் பொறுப்பு ளானே. 5

வேதமுறை வித்தாகி வித்துக் குள்ள
விளைவான வாகமமாய் விரிந்தான் மிக்க
சீதமுறுங் காழியினிற் சிவபார் தற்கு
திருஞான சம்பந்த சேயாய் வந்தோன்
ஓதியசெந் தமிழ்க்குவந்தா ,னுதவு ஞான
முமிழ்மதத்தான் நால்வாயா னுறுதி யான
போதமுறு மாதவர்சூ ழொட்டம் பட்டில்
பொருந்துமவ னெனையாளும் பொறுப்பு ளானே. 6



முன்னமொரு தரணிபனுஞ் சோம காந்தன்
மொய்குழலாள் சுதன்மையொடு கானம் புக்கி
தன்னுடைய தொழுநோயைத் தீர்ப்பா னெண்ணி
தவமுனியாம் பிருகுவினு லுபதே சித்த
உன்னரிய வோரெழுத்தைச் செபித்துப் போற்ற
உவந்தவன்பா லெழுந்தருளி வுறநோய் தீர்த்தா
பொன்னகருக் கிணையாகு பொட்டம் பட்டில்
பொருந்துபவ னேணையாளும் பொறப்பு ளானே. 7

அத்திவுரி போர்த்தவனே அண்ட ரண்ட
பத்தனையு மாவானென் றறிவா லாய்ந்து
சுத்திவந்து மாங்கனியோன் றளிக்கப் பெற்ற
தூய்மையினன் ததிக்கையுளான் சூழ்ந்தோர் தன்பால்
பத்தியுளான் தனக்கெனவோர் பற்று மில்லான்
பகடேறி வருவானைப் பற்றப் பாரான்
புத்தலர்தோய் பூம்பொழில்சூ ழொட்டம் பட்டில்
பொருந்துபவ னேணையாளும் பொறப்பு ளானே. 8

ஆரணத்தான் அமரர்துயர் அடைதல் கண்டு
அவுணர்பெறு முப்புரத்தை யெரித்தற் கேற்ற
காரணத்தான் சண்முகனோர் கன்னிக்காக
கனிந்துபெருங் கானகத்திற் கருத வந்த
வாரணத்தான் உமையபன்மால் மதியுஞ்செவ்வாய்
வரியரவும் பூசித்து வணங்கப் பெற்ற
பூரணத்தான் பூசிதர்சே ரொட்டம் பட்டில்
பொருந்துமவ னெனையாளும் பொறுப்புள்ளானே. 9

தந்தையுடன் றயாகித் தாரமாகி
தனையர்களுஞ் சுற்றமுஞ்சற் குருவு மாகி
மேதகுநற் பொருளுடன்நீள் வாழ்வு மென்றன்
வினையகற்றும் விக்கினேச்சுர னு மாகி
வீதமுற காசிநகர் வாழ்வோர்க் குள்ள
வீடுதொறு மமுதருந்தும் விருந்தோ னாகி
பூதகணத் தரசாகி யொட்டம் பட்டில்
பொருந்துமவ னெனையாளும் பொறுப்பு ளானே 10

## ஸ்ரீசுந்தர விநாயகர் ஆலயம் புதுக்கினவர்.

நெட்டைக்கொம் பொன்றுடையா னிலைத்தற் கிந்த
நீணிலத்தில் பலவளமு நிறைந்தி லங்கும்
ஒட்டம்பட் டெனுமூரில் உவப்பி னோடு
வுயர்வான கோயிலொன்று உறுதி யாக
வட்டமதி யோடிரவி வயங்கு நாளு
மாசடைந்து சிதருமல் புதுக்கி வைத்தான்
சிட்டனெனுஞ் சுப்ராய முதலி மைந்தன்
சிங்கார வேல்முதலி செழிக்க மன்னே.

திருச்சிற்றம்பலம்.

முற்றிற்று.



